*Kumaraṉ*

*Āram 2, muttu 14*

*November 26, 1924*

Record no. 313

Registered No. M. 1823. உடனிவாயம். "KUMARAN" Karaikudi.




"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று."                "திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம். உ } காரைக்குடி, ரக்தாக்ஷிஸு கார்த்திகைமீ ககஉ (26-11-24) { முத்து கசு

## கொடிய களை.

நமது தென்னாட்டு இயக்கங்களாகிய இன்பப் பயிரைச் சாதிப் பகைமை யெனுங் கொடிய களையானது சூழ்ந்து கொண்டு பெரிதும் துன்புறுத்திக் கொண்டு வருகின்றது. நாட்டில் சாதிப் பகைமையால் விளையுங் கலாங்களுக்கு ஓர் எல்லையில்லை. யாண்டும்சாதிப்பகைமை குடியேறி யிருத்தலால், நாட்டில் மொழியைப் பற்றியாதல், சமயத்தைப் பற்றியாதல், அரசியலைப் பற்றியாதல், எவ்விதமான இயக்கமும் உரம் பெற்று ஓளிர வில்லை! எவ்வியக்கத்தையும் வளர விடாது குறுக்கிட்டுத் தடுப்பது சாதிப் பகைமை யெனுங் கொடிய களையே யாகும். பிராமணர், பிராமணரல்லாதார் எனும் வேற்றுமையால் விளையும் தீங்குகளை என்னென்று இயம்புவது? பிராமணர்களுக்குள்ளேயே, வைணவர், சுமார்த்தர், எனும் வேறுபாடு எவ்வளவு தீமைகளை விளைவிக்கின்றது? வைணவர்களுக்குள் வடகலையார், தென்கலையார் எனும் பிரிவு எத்துணைத் துன்பங்களைத் தோற்றுவிக்கின்றது? பிராமண ரல்லாதார்க்குள் வேளாளர், வைசியர் முதலிய பல் வேறு வகைப்பட்ட சாதிப் பிரிவுகள் எத்தனை அல்லல்களை எழுப்புகின்றன? இவைகளெல்லாம் சொல்லுந் திறத்தனவோ?

*   *

சாதிப்பாகுபாட்டால் யாதொருவிதமான தொந்தரவு மில்லை! "நீ தாழ்ந்தவன்; நான் உயர்ந்தவன்; உனக்கு இப்போது உரிமை இல்லை! எனக்குத்தான் உண்டு." எனும் சாதிப் பகைமையே நாட்டைப் பெரிதும் கலக்குகின்றது. "எல்லா வகுப்பின ருள்ளும் நாங்களே தலை சிறந்தவர்கள்; நாங்கள் ஒரு கூட்டம்; நீங்களனைவரும் ஒரு கூட்டம்" என்று இறுமாந்து உரையாடும் உயர்ந்த வகுப்பாரிட மிருந்தே சாதிப் பகைமை தோன்றுகின்றது. பின்னர் எல்லோரிடத்தும் பரவி இடர் செய்கின்றது. சாதிப்பகைமை யெனுங்கொடியகளையால், ஒரு நாட்டு இயக்கங்களாகிய இன்பப் பயிர்கள் வாடிக் கருகி யொழிகின்றன வென்றால், இதை விட நாட்டிற்கு வேறு என்ன கேவலம் வேண்டும்? மற்ற நாட்டு மக்களுக்கு முன்னே, நாமும் நம்மை ஆடை அணிகலன்களால் அலங்கரித்துக் கொண்டு முன்னணியில் நிற்க மனமும் வருகின்றதே! ஒரு சிறிதும் வெட்க மில்லையே! சாதிப் பகைமை யொழிய வேண்டு மெனில், வரட்டுச் சாத்திரிகளல்லவோ, புரட்டு ஏட்டுக்கட்டுகளை எடுத்துக் கொண்டு வந்து அவிழ்த்துப் பொய்யுரைகளைப் பரப்பி மக்கள் மனத்தைக் கலக்கிவிடுகிறார்கள்.

*   *

எல்லாவற்றிற்கும்இவ்வைதிகர் எனும்முட்டுக் கட்டைகள்தான் குறுக்கிட்டுப்பெரிதும் தடை செய்கின்றன. "நாட்டு மக்கள் அனைவரும் நாட்டுப் பொது உரிமைகளை அநுபவித்தல் வேண்டும்" என்று சொன்னால் இந்த முட்டுக் கட்டைகள் தான் தங்குடி மூழ்கிப் போனது போல் அலறுகின்றன. எத்தகைய நல்ல சீர்திருத்தத்தை மக்களுக்கிடையில் செய்தல் வேண்டு மென்று முற்பட்டாலும், முற்படுவோர்க்கு முன்னே ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு இவ்வைதிகர்கள் வந்து தொல்லைப்படுத்துகிறார்கள். எல்லோரும் ஒன்றுபட்டு இவர்களுடைய ஆர்ப்பாட்டத்தை ஒடுக்குதல் வேண்டும். இவர்கள் வீணுரைகளுக்கு யாரும் செவி சாய்த்தலாகாது! அறிவாளிகள் அனைவருஞ் சேர்ந்து சாதிப் பகைமை யெனுங் களையைக் களைந்தெறிதல் வேண்டும். நாட்டு மக்களனைவரும் மக்கட் பிறப்பினரே. ஒருவரும் விண்ணினின்றும் மண்ணிற்கு வந்தருளியவ ரல்லர். எல்லோர் பிறப்பும் ஒரு தன்மைத்தாய பிறப்பே! வளர்ந்து, வசிக்கும் நாடும் ஒன்றே! பேசும் மொழியும் ஒன்றே! பிறகு இறந் தொழிவதும் இம் மண்ணிலேயே! ஒருவரும் உயிரோடு விண்ணுல கெய்துபவ ரல்லர்.

*   *

உலகத்துமக்களனைவரும் எல்லாம் வல்ல இறைவனுடைய நன்மக்களே யாவர்கள். அவர் திருமுன்னர் எவ்விதமான வேறுபாடு மில்லை! சூரியன், சந்திரன், காற்று, வெளிச்சம், மழை முதலியன உயிர்கள்பால் உயர்வு தாழ்வு கற்பித்து, தாழ்ந்தவற்றிற்கு உதவி புரியாதிருக்கின்றனவோ? பின்னர் பிறப்பால் வேற்றுமை எற்றுக்கு? உயர்வு தாழ்வு ஏன் உணரப் படுதல் வேண்டும்? சாதிப் பகைமை எற்றுக்கு? வீண் கலாங்கள் ஏன்? எல்லோரும் ஒன்றுபட்ட வாழ்வு வாழ்தலாகாதா? ஒன்றுபட்ட வாழ்வே இன்ப வாழ் வாகும். ஒன்றுபட்ட வாழ்வு அரும்பினாலொழிய, நாட்டில் நாம் எவ்விதமான முன்னேற்றத்தையும் எதிர் பார்க்க முடியாது. உடலினுள் நோயானது அதிகப்பட்டுக் கொண்டேயிருக்க, அதனைத் தீர்க்க முயலாது; வெளித்தோற்றத்தை அழகு படுத்துவதனாற் பயனின்று. நமது நாடு எனும் ஒப்பற்ற உடலுக்கு எல்லோரும் அவசியமான உறுப்புக்களே யாவார்கள். ஒன்று தாழ்வுற்றாலும் அவ்வுடல்குறைவுடையதேயாம். எல்லாம் இன்ப வாழ்வு பெற்றால்தான் அஃது நிறைவுடையதாகும்.

*   *

எனவே, யாண்டும் ஒன்றுபட்ட வாழ்வானது நன்கு செழித்து ஓங்கி வளருதல் வேண்டும். நாட்டுப் பற்றுடையவர்களனைவரும் மக்களுக்குள் ஒன்றுபட்ட வாழ்வை நிலை நிறுத்தப் பெரிதும் பாடுபடுதல் வேண்டும். மக்களுக்குள் எத்தகைய வேற்றுமை உணரப்படாது, "நாங்க

## வருங்காலத்து மக்கள்.

நமது நாட்டின் வருங்காலத்து மக்கள் இளைஞர்களே யாவார்கள். நமது நாட்டின் வருங்கால வாழ்வு இவ்விளைஞர் நிலையைக் கொண்டே நிச்சயிக்கத் தக்கதாகும். எந்த நாட்டில் முன்னேற்ற அறிகுறிகள் புலப்படுகின்றனவோ, அந்த நாட்டில் இளைஞர் நிலையும் முன்னேற்ற மடைந்து கொண்டே யிருக்கும். நாட்டின் முன்னேற்றத்திற் குரிய விதைகளை யெல்லாம் இளைஞர்கள் உள்ளத்திலேயே விதைத்தல் வேண்டும். சின்னாளில் விண்ணுலகேகும் வயோதிகர் உளத்தில் விதைப்பதாற் பயனின்று. நாட்டின் நலங்கருதுவோருடைய கண்கள் ஒளி பொருந்திய இளைஞர்களுடைய அழகிய முகங்களையே நாடுதல்வேண்டும். அன்னோர் பொன்னுரைகள் இளைஞர்களுடைய இன்செவிகளிலேயே புகுந்து பயன் விளைவித்தல் வேண்டும்.

இளைஞர்களைச் சிறுவரெனப் போற்றாதிருக்க லாகாது. சிறுவர்களுடைய உளங்களிலே சாந்தமாக இப்பொழுது விதைக்கும் சீர்திருத்தங்களாகிய விதைகளெல்லாம் நன்கு ஊறித் ததும்பிப் பின்னர் முளைத்துவளர்ந்துமுதிர்ந்து இனிய நறுங்கனிகளை நல்கி நாட்டினை இன்புறுத்தும். இப்பொழுது நாம் எவ்வளவு பாடு படுகின்றோமோ, அவ்வளவு பயன் பின்னர் கிடைக்கும். இதுகாலை மணல் வீடு கட்டிச் சிறு சோறு அட்டு உண்டு மகிழ்ந்து உரையாடி விளையாடும் சிறுவர்களிலேதான் பிற்காலத்தில் புரவலராகவும், புலவராகவும், வணிக மணிகளாகவும், நீதிபதிகளாகவும், பிற பல அறிஞராகவும் வரக்கூடியவர்கள் பலர் உளர்.

நாட்டின்நலங்கருதியுழைக்கவேண்டியவர்கள்இச் சிறுவர்களினின்றுந்தோன்றும் அறிஞர்களே யாவார்கள். எனவே, இவ்விளைஞர்களுக்கு ஊட்டும் உணர்வே பயன்தரத் தக்கதாகும். பெற்றோர்களாகிய தாய் தந்தையர் தமது காதலின் வடிவமாகப் பிறக்கின்ற காதலர்களை யாவரும் விரும்பும் வண்ணம் நன்கு வளர்த்தல் வேண்டும். இளைஞர்களுடைய உள்ளத்திலே அடிமைத் தனத்தை எழுப்புதலாகாது. அறிவும் ஒழுக்கமும் பலமும் உடையவர்களாக இளைஞர்களை ஆக்குதல் வேண்டும். இஃது பெற்றோர்களின்சிறந்தகடமை யாகும். வயிறு நிறையச் சோறிட்டு உடலை வளர்ப்பது மட்டும் பிள்ளைகளை வளர்ப்பதாகாது. அஃதோடு அறிவு முதலியன வற்றை ஈதலுமே வளர்த்தலாகும். நமது நாட்டில் பிள்ளைகள்பால் பெற்றோர்கள் பெருங் கவனஞ் செலுத்துகின்றார்க ளில்லை. பிள்ளைகளும் நல்ல பிள்ளைகளாக வளருகின்றார்களில்லை. இக்குறையை யொழிப்பதற்குப் பெற்றோர்கள் முயலுதல் வேண்டும். இளைஞர்களும், வருங்காலத்து மக்களாகிய நாம் இதுகாலை நன்னிலையை யடைந்தாற்றான், பின்னரும் நன்னிலையினின்று நாட்டின் பொறுப்பை யேற்று மகிழ்தல் கூடும் என்று எண்ணிச் சுறுசுறுப்பும் தைரியமும் நற்குணமும் அறிவும் நிறைந்தவர்களாக மிளிர முயலுதல் வேண்டும்.

ளனைவரும் ஒரே கூட்டத்தார்'' என்ற எண்ணமானது நிலைத்து நிற்கும்படிசெய்தல் வேண்டும். பொது உரிமைகளை த்தாராளமாக அனைவரும் துய்த்தல் வேண்டும். ஒருவகுப்பாரை மற்றொரு வகுப்பார், ''நீங்கள் இங்கே வரக்கூடாது; அங்கே போகக்கூடாது '' என்று அம்பலஞ் செய்தல் கூடாது. உயர்ந்தவர்கள் என இறுமாந்திருப்போர் இனிமேல் எவ்விதமான அக்கிரமமுஞ் செய்தலாகாது. தாழ்ந்தோர் எனப்படுவோரை கொடூரமான கண்களோடு பார்த்தலாகாது. கிட்டத்தில் வரக்கூடாது என்று அடித்துத் துரத்துதல் கூடாது. ஒருவரை யொருவர் காணும் பொழுது மனத்தில் எத்தகைய வேறுபாடும் உண்டாகக்கூடாது. எல்லோரும் ஒரு நாட்டரே என்ற எண்ணம் தோன்றுதல் வேண்டும். ஒருவர்க் கொருவர் அன்போடு உதவிகளைச்செய்துகொள்ளுதல் வேண்டும். மனத்தை வேறுபடுத்திக் கொண்டிருக்கும் மாசுகளெல்லாம் அகலுதல் வேண்டும். யாண்டும் அன்பும் இன்பமும் பெருகுதல் வேண்டும்.

வாகீச பக்தன்.

## பிராணிகள்பால் அன்பு.

பகுத்தறிவுடைய மக்களாகிய நாம் ஏழைப்பிராணிகள்பால் நமது முழு அன்பினையும் செலுத்துதல் வேண்டும். நமது இளைய சகோதரர்களாகிய அப்பிராணிகள் நம்மிடத்துப் பேரன்பு காட்டுகின்றன; நமக்குத் தொண்டுகள் பல புரிகின்றன. அவைகள் நமக்குச் செய்யும் தொண்டுகளை நாம் ஒரு நாளும் மறத்தலாகாது. நமது நன்றியறிதலான பேரன்பினைச் செலுத்தி அவைகளை நாம் காப்பாற்ற முயலுதல் வேண்டும். அவைகளுக்கு நாம் எவ்விதமான இன்னலையும் இழைத்தலாகாது. அவைகளும் நம்மைப் போன்ற உயிர்களே என்ற எண்ணமானது ஒவ்வொருவர் உள்ளத்திலும் பசுமரத் தாணிபோற் பதிந்திருத்தல் வேண்டும். நமது அன்பு எவ்வளவு விரிந்து செல்கின்றதோ, அவ்வளவு அவைகளின் அன்பும் விரிந்து செல்கின்றது. இரு சார்பிலும் அன்பு நிலை உரம் பெறுகின்றது; இன்ப வாழ்வு உதயமாகின்றது. எனவே, பிராணிகள்பால் அன்பு செலுத்தலில் நாம் ஒரு நாளும் பின் வாங்குத லாகாது.

பிராணிகள்பால் அன்பு பூண்டு அவைகளைப் பரிபாலித்தருளிய மெய்யன்பர்களின் சரிதைகள் பலவற்றை நாம் கேட்டின்புற் றிருக்கின்றோம். பாரிவள்ளல், ஆடையின்றி வாடையால் மெலிந்து கொண்டிருந்த மயிலொன்றிற்குத் தனது விலை யுயர்ந்த போர்வையைக் கொடுத்தருளினார் என்றறிகின்றோம். மனுநீதி கண்ட சோழன், ஓர் பசுவின் கன்று தன் மகன் நடாத்திச் சென்ற தேர்க் காலிற் சிக்குண்டு இறந்த செய்தியை யறிந்தஞான்றே அவ்வரும் பெறற் புதல்வனை அத்தேர்க் காலின்கீழ்க் கிடத்தித் தேரை யூர்ந்து, கன்றைப் பிரிந்து கதறிக் கொண்டிருந்த பசு பெற்ற துன்பத்தைத் தானும் பெற்றானென்று தெரிகின்றோம். சிபிச் சக்ரவர்த்தி ஓர் புறவிற்காகத் தன் தசையை ஈடு செலுத்தினார் எனும் வரலாற்றினையும் வாசித்திருக்கின்றோம். அசோக மன்னர் பிராணிகள்பால் பேரன்பு கொண்டு, நாடெங்கும் மிருக வைத்திய சாலைகளும் பிராணி வளர்ப்புச் சாலைகளும் அமைத்திருந்தனர் என்றும், பிராணிகளின் பொருட்டுச் சட்ட திட்டங்கள் பல செய்திருந்தனர் என்றும் அறிகிறோம். இத்தகைய அரசர் பெருமக்களெல்லாம் பிராணிகள்பாற் பேரன்பு காட்டி யிருக்கும் போழ்து, ஏழை மக்களாகிய நாம் என் ஏழைப் பிராணிகளை வதைத்தல் வேண்டும்?

இந்நாளில் பகுத்தறிவில்லாத மக்கள் பலர் வாயிலாத பிராணிகளைப் பெரிதும் துன்புறுத்து கின்றார்கள். உண்டு களியாட்டயர்தற் பொருட்டு எத்தனையோ கோடிக் கணக்கான உயிர்ப் பிராணிகள் ஒவ்வொரு நாளும் கொலை செய்யப் பெறுகின்றன! இக்கொடுமை எழுத வொண்ணாததாகும். நமக்குப் பேருதவி புரிகின்ற எருது, குதிரை, பசு முதலிய வீட்டுப் பிராணிகளை மக்கள் எவ்வாறு கொடுமையாகநடத்துகின்றார்களென்று விசாரிக்கப் புகுவோமானால், அஃதும் ஓர் பெருங்கதையாக விரியும். மக்கள் பிராணிகளைப் பெரிதும் துன்புறுத்துகின்றார்கள். பிராணி உலகத்தினைத் ! தாங்கள் தான் அடக்கி ஆள வேண்டிய அரசர்களென் நினைக்கிறார்கள். அஃது பெருந்தவறாகும். உயிர்ப் பிராணிகளின் தந்தையாராகிய எல்லாம் வல்ல இறைவன் திரு முன்னர் எத்தகைய வேறுபாடும் இல்லை. மக்களாகிய நாமும் மாக்களாகிய எளிய பிராணிகளும் ஒரே படித்தேயாம். இறைவன், அவைகளை நாம் அடக்கியாளுதற் பொருட்டுத் தோற்றுவிக்க வில்லை! ஒரு சாரார்க் கொரு சாரார் உதவி செய்து கொண்டு இன்பமாய் வாழ்தற் பொருட்டே எல்லோரையும் இறைவன் தோற்றுவித் தருளி யிருக்கின்றார். ஆகவே, அன்பர்கள் உயிர்ப் பிராணிகளுக்கு எவ்விதமான அல்லலும் இயற்றாது, அன்பு செலுத்தி அவைகளோடு இன்ப வாழ்வு வாழ்ந்து இறைவன் இன்னருளுக்குப் பாத்திரராக ஆதல் வேண்டும்.

அ. சோம.






## கூழை ரங்கன்.

(முன் தொடர்ச்சி.)

மத்தியான சாப்பாட்டுக்கு வேண்டியயாவற்றையும் நமது கிஷ்கிந்தாபுரி ராமன் செய்து முடித்திருந்தான். வெளியூர்களிலிருந்தும் உள்ளூரி லிருந்தும் வந்திருந்த ஜனத்திரளுக்கு நல்ல உணவு கொடுக்கப்பட்டது. பிராமணர்களைப் பொறுத்த மட்டில் புகையிலை ராமண்ணாவும், சொந்த ஜாதியாரைப் பற்றிய யாவற்றுப் பொறுப்பையும் கிஷ்கிந்தாபுரியும், பிற ஜாதியாருக்கு வேண்டியவற்றை அம்பலகாரருமாக ஏற்றுச் சபிண்டியை வெகு சிறப்பாக முடித்தார்கள். இதிலிருந்து நமது ரங்கநாதன் செட்டியாருடைய பெயர் எங்கும் பரவத் தொடங்கியது. சோணாசலச் செட்டியார் இறந்து போன பிறகு இவரே குடும்பத் தலைவராகிவிட்டபடியாலும் கணக்கின்றிப் பணத்தை வாரி யிறைக்கிறபடியாலும் சோணாசலச் செட்டியார் இறந்த தினத்திலும் சபிண்டி தினத்திலும் மிக விமரிசையாகக் காரியங்களை நடத்திய படியாலும் லட்சக்கணக்காகப் பணமிருக்கிற தென்று யாவரும் கருத இடமிருந்தபடியாலும் ரங்கநாதன் செட்டியாரின் பெயர் மிக எளிதாக எங்கும் பரவிவிட்டது. இதுவரை செய்து வந்த அட்டூழியங்கள் ஒருவாறு மறைந்தே நின்றன. பெரும் பணக்காரர் செய்கிற குற்றங்கள் வெளியே வருவதில்லை. ஏழைகள் சிறிய தவறு செய்தாலும் அதை உலக ஜனங்கள் பேசிப் பேசிப் பெரிதாக உலகிற் பரவச் செய்வார்கள், பணக்காரர் பெரிய குற்றங்களைச் செய்தாலும் அதனைப் பற்றிப் பேசப் பயப்படுவ தியல்பல்லவா? பணக்கார கோஷ்டியில் சேர்ந்த நமது ரங்கநாதரைப் பற்றிப் பஹிரங்கமாக எவரும் தூற்ற அஞ்சினார்கள். பணத்தை ஏராளமாகப் பலர்க்குக் கொடுப்பதால் அவர்கள் இவரைப் புகழ்ந்து கொண்டே யிருந்தார்கள், இன்னும் பலர் பண உதவி பெறலாமென்றெண்ணிப் புகழ்ந்து கொண்டிருந்தனர். இந்தப் பிரசாரம் பலமாக விருந்தபடியால் ஒருவாறு இவருடைய கெட்ட குணங்கள் வெளியே அதிகமாகப் பரவவில்லை.

### அத்தியாயம் ௯.
### தான தருமம்.

புகையிலை ராமண்ணா நடத்தையில் பிசகுடையவரானாலும் உலக வியவகாரத்தில் மிகக் கெட்டிக்காரராயிருப்பதால் முதலாளியின் நிலைக்கு உத்தியோகஸ்தர்களுடைய உறவு மிக அவசியமாகு மென்று கருதினார். நடை தவறிப்பலவழிப் பட்டிருப்பவர்க்கு உத்தியோகஸ்தருடைய்தயவு இன்றியமையாததென்பதுராமண்ணாவின் அபிப்பிராயம். ஆகவே அப்பகுதிக்குப்புதிதாக வேலை யொப்புக்கொண்டிருந்த அரசாங்கத் தலையாரியைப் பார்ப்பதற்காக முதலாளியும் தாமுமாகச் சென்றார்கள். தலையாரியும் ரங்கநாதரின் புகழை யறிந்தவ ராதலாலும் பணக்காரரென்று கேள்விப் பட்டிருந்ததாலும்செட்டியாருக்கு மிக்க மரியாதை செய்தார். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு ''அடுத்து வருகிற வெள்ளிக்கிழமை இரவு ஒரு நிலா போஜனம் நடைபெற ஏற்பாடு செய்திருக்கிறோம்; அதற்கு அவசியம் வர வேண்டும்'' என்று ரங்கநாதர் புன்சிரிப்போடு சொன்னார். தலையாரியும் சந்தோஷமாக வர ஒப்புக்கொண்டார். மேற்படி தலையாரி செல்லமங்கலம் தாலுகாவில் முன் உத்தியோகம் பார்த்தவ ராதலால் அங்கு கிராமம் வாங்கி யிருந்த வையாபுரி செட்டியாருடன் அதிகப்பழக்கமுடையவராக விருந்தார். வையாபுரி செட்டியாரிட மிருந்த பணம் இப்போது குறைவுபட்டு விட்டாலும் மிக உன்னதமான குணங்களுடையவராக விருந்தார். வயதானவர். மிகுந்த யோக்கியர். ஏழைகளிடத்தில் மிக இரக்கம் வாய்ந்தவர். இவருடைய பொருளுதவியினாலேதான் செல்வராஜபுரத்தில் ஒரு நல்ல பசு மடம் நடை பெற்று வருகிறது. கிலப்பட்டிருந்த அவ்வூர்ச் சிவன்கோயிலையும் நன்றாகக் கட்டி அந்த ஊருணிக்குக் காட்டிவிருந்து மடைபோட்டுத் தண்ணீர் வரவழைக்க வேண்டு மென்று தீர்மானித்திருந்தார். யாழ்ப்பாணத்தில் இவருக்குச்சொந்தமான இரண்டு பெரிய கப்பல் முழுகிப்போய் விட்டபடியால் மிக நஷ்ட மடைந்து கடனுக்காளாகி விட்டார். ஆகவே இவர் அதிகமாகச் செல்வராஜபுரத்திற்கு வருவதில்லை. செல்லமங்கலத்தில் இவருக்கு நிலங்களிருந்தன. அவற்றைப் பார்த்துக்கொண்டு அங்கேதான் வெகுநாளாக வாசம் செய்து கொண்டிருந்தார். இவரிடத்தில் யாவருக்கும் நல்ல மதிப்புண்டு. நமது சோணாசலச் செட்டியார் கோவில் கட்டுவதற்க்காக எடுத்து வைத்திருந்த பணத்திற்கு ஏற்படுத்தி யிருந்த டிரஸ்டிகளில் இவரு மொருவ ராவர். இப்போது இவருக்கும் நிலா போஜனத்திற்கு ரங்கநாதரின் அழைப்பு சென்றது. குறித்தபடி வெள்ளிக்கிழமை மாலையிலேயே வந்து சேர்ந்தார்கள். கோவிலுக்குப் பக்கத்திலுள்ள தமது ''மேனகா விலாஸ்'' பங்களாவில் விருந்து நடைபெற்றது. ராமண்ணாவும் ராமனும் அம்பலகாரருமிருக்கும்போது விருந்தைப் பற்றிக் கேட்கவா வேண்டும். அற்புதமான சாப்பாடு. உண்டு முடிந்ததும் நல்ல தொரு நிலாமணிமுற்றத்தில் ரத்தினக் கம்பளம் விரித்திருந்தது. காதவழி மண நாறும் சந்தனத்தை நிறையப் பூசிக்கொண்டு தலையாரி நடுவிலே வீற்றிருந்தார். பக்கத்திலே வையாபுரி செட்டியாருமிருந்தார். வையாபுரி செட்டியார் மெதுவாக ''ரங்கநாதன் நல்ல பிள்ளை; ஸ்தோத்திரப்பிரியன்; இந்த ஊரில் நல்ல தண்ணீரில்லாக் குறையை இவனைக் கொண்டு ஒழுங்கு செய்து விட வேண்டும்; சந்தர்ப்பத்தை விட்டு விடக்கூடாது; அவன் மிக உதார குணமுடையவன்; ஆனால் ராமண்ணாவை முன்னாடியே தன்னக் கட்டிக் கொள்ள வேண்டியது மிக அவசியம்'' என்று தலையாரி காதில் சொன்னார். தலையாரியும் இது சரியான வேலை யென்று தீர்மானித்துக் கொண்டு புகையிலை ராமண்ணாவிடத்தில் ''செட்டியார் பணம் பலவழியாகப் போகிறதே. அதிற் கொஞ்சத்தை உபயோகமான தரும வழியில் திருப்ப உத்தேசிக்கிறேன். வையாபுரி செட்டியாரும் அப்படியே எண்ணுகிறார்கள். வேறொன்றுமில்லை; அவர்களுடைய ஊருணியை நன்றாக்ச் சுத்தம் செய்து நல்ல தண்ணீர் தேங்கும்படி செய்ய வேண்டும்'' என்றார். ராமண்ணாவுக்கும் நல்லதென்று தோற்றியது. இதற்குள் ரங்கநாதரும் ''உத்தியோகஸ்தர்கட்கு இந்த விருந்தெல்லாம் சாதாரணமாகத்தானிருக்கும்'' என்று சொல்லிக்கொண்டே வந்து உட்கார்ந்தார்.

தலையாரி:—என்ன செட்டியாரவர்கள்! நீங்கள் உபயோகிப்ப தெல்

லாம் பாலும் பன்னீருந் தான் போலிருக்கிறதே?

சேட்டியார்:—எனக்குப் பாலில் விருப்பம் அதிகந்தான்; இருந்தாலும் நீங்கள் சொல்லுவது உபசாரமாகத் தான் கொள்ள வேண்டும்.

ராமண்ணு:—வேறு வழி! கிணற்றுத்தண்ணீர் முழு உப்பு. ஊருணித் தண்ணீரைப் பார்த்தால் உங்கள் தாயார் ஊட்டிய பால் கூட வெளியே வந்துவிடும்.

தலையாரி—ஏன் அப்படி யிருக்கிறது? தண்ணீரில்லாமல் ஜனங்கள் என்ன செய்கிறார்கள்? குடிப்பதற்கு வகை யென்ன?

ராமண்ணு:—பேர்தான் செல்வராஜபுரம்! குடிக்கத்தண்ணீரேது? நமது செட்டியார் இங்கே பிறந்திரா விட்டால் இது ஊரா? நமக்கு மட்டும் நான்கு மைலுக்கு அப்பால் உள்ள ஆற்றங்கரைத் தென்னந்தோப்பிலிருந்து தண்ணீர் வருகிறது.

தலையாரி:—தண்ணீர்க் குறைவுள்ள ஊரில் குடி யிருப்பதே மகா பாவம்! அடடா! ஏழை யெளியவர்களெல்லாரும் என்ன செய்வார்கள்? தண்ணீர்க் கஷ்டத்தால்தான் இங்கு பல நோய்கள் தோற்றுகின்றன போலும்!

வையாபுரி செட்டியார்:—இதொரு பிரமாத மில்லை. ரங்கனுதன் நினைத்தால் உடனே முடியக்கூடிய காரியந்தான். எவ்வளவோ பணத்தைச் செலவழிக்கிறுன். இதிற் கொஞ்சம் செலவிட்டால் மதிப்புண்டு; புண்ணியமுமுண்டு. அவனுக்கு மனம் வரவேண்டும்.

இம்மட்டோடு சம்பாஷணையும் முடிந்தது. ரங்கநாதரும் உடன்பட்டார். வையாபுரி செட்டியாரும் ராமண்ணுவும் மேற்பார்ப்பதென்றும், அம்பலகாரர் ஆளனுப்புவதென்றும் தலையாரி அவர்கள் குழாய் போடுவதற்கு நிலங் கிடைக்கும்படி ஜமீனில் உத்தரவு வாங்கிக் கொடுப்பதென்றும் முடிவுசெய்யப்பட்டது.

அந்த ஊரிலிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள பெருங் காட்டின் நடுவில் பெரிய கம்வாய் ஒன்று வெட்டி அதில் மழைத்தண்ணீரைப் பெருக்கி அதிலிருந்து குழாய் போட்டு செல்வராஜபுரத்தின் நடு ஊருக்குக் கொண்டு வருவதென்று முடிவு செய்தார்கள். ரங்கநாதருடைய முன்னோர்கள் அவ்வூரின் மத்தியில் ஒரு பிள்ளையார் கோவில் கட்டி அதற்கு முன்பாக ஒரு ஊருணியும் அமைத் திருந்தனர். அதிலுள்ள தண்ணீர் உபயோகத்திற் காகாதபடியால் ஒருவரும் அதனைத்தேடவில்லை. அவ்வூருணியைச்சுத்தப் படுத்திப் புதிதாகச் சுற்றிலும் கல்வரி யெடுத்து அதிக ஆழம் வெட்டிப் புதிய மண்ணடித்து ஒழுங்கு செய்து காட்டுக் கம்வாயிலிருந்து குழாய் வழியாகத் தண்ணீரைப் பெருக்கினார்கள். இந்த ஊருணித் தண்ணீர் மிக அற்புதமாகி விட்டது. இதில் தான் நமது ரங்கநாதரின் புகழ் எங்கும் பரவிவிட்டது. குடிக்கத் தண்ணீரில்லாத ஊரில் தண்ணீர் வசதி செய்ததொன்று. புராதன தருமத்தில் கவனஞ் செலுத்தியது மற்றொன்று; நவீன தரும மென்றும், காலத்துக் கேற்ற பயனுடைய தருமமென்றும், எந்த உயிர்ப் பிராணிகட்கும் வித்தியாசமில்லாத தருமமென்றும் பலர் புகழ வாரம்பித்தனர். இதற்குச் சுமார் அறுபதாயிரம் ரூபா செலவாகி விட்டது. என்றாலும் சிறந்த மதிப்புண்டாகி விட்டபடியால் பிரபு சந்தோஷ மடைந்திருந்தார். ரங்கநாதருடைய புகழானது எங்கும் பரவவே தினந்தோறும் நூற்றுக் கணக்கான யாசகர்கள் வரத் தலைப்பட்டனர். அவர்கட்கும் இல்லை யென்னுது கொடுக்க வேண்டியதாக விருந்தது. இப்படியே சில நாட்கள் சென்றன. மெய்யம்மை யாச்சி மறுமையில் நல்ல வாழ்வு பெற வேண்டுமென்று ஆசை கொண்டவளாய்த் தினந்தோறும் தங்களுக்குச் சொந்தமாக விருந்த பிள்ளையார் கோவிலுக்கு மாலை நேரத்தில் சென்று வணங்கி வருவதை வழக்கமாகக் கொண்டார்கள். புதிதாக ஊருணியைச்சீர்ப்படுத்திக் காவல் போட்டிருப்பதாலும் பிள்ளையார் கோவிலைப் பிரித்து அழகாகக் கட்டியிருப்பதாலும் பலர் அப்பகுதியில் வரப்போக விருந்தனர். மெய்யம்மையாச்சிக்கு இந்தப் பிள்ளையார் கோவிலைக் கூட்டுவதும் மெழுகுவதுங் கோல மிடுவதுமாகப் பொழுதிற் பெரும் பாகம் போய்க் கொண்டிருந்தது. இப்பொழுது பழைய முரட்டுத் தனமும் சாமியாட்டமும் அடங்கிவிட்டன. இந்தக்காலத்தில் ஒருநாள் ஒரு அம்மாள் பிள்ளையார்கோவில்முகப்பில்வாடியமுகத்துடன் படுத்திருப்பதை மெய்யம்மை யாச்சி கண்டு "யார் கோவிலில் வந்து படுத்திருப்பது?" என்று அதிகாரத்தோடு கேட்டாள். அதற்குப் படுத்திருந்த ஆளின் வாயிலிருந்து தீன சுரத்தில் "நான் ஒரு ஏழை; கஞ்சியைக் கண்டு மூன்று நாளாகி விட்டன; தொண்டைக்கு நெஞ்சுக்குமாக மூச்சு ஓடிக் கொண்டிருக்கிறது; எழுந்திருக்க முடியவில்லை" என்ற சொற்கள் வந்தன. பக்கத்தில் நின்ற ஆண்டிச்சி மெய்யம்மை யாச்சியைப் பார்த்து, "இந்த அம்மாள் நேற்று இரவு என்னமோ பாட்டுப் பாடிக் கொண் டிருந்தாள். அழகாகவிருந்தது. குயில் மாதிரி பாடினுள்; கொஞ்சம் கஞ்சி ஊற்றினுல் பாட்டுக்கேட்கலாம்; சைவ வீட்டு அம்மாள் மாதிரி யிருக்கிறுள்" என்று சொன்னுள். இதைக்கேட்டவுடன் மெய்யம்மை யாச்சிக்குச் சிறிது இரக்கம் வந்துவிட்டது. ஆண்டிச்சியை அனுப்பி ராமண்ணு வீட்டிலிருந்து சாதம் கொண்டுவந்து கொடுத்து எழுந்தவுடன் கூட்டிக் கொண்டு வீட்டுக்கு வரும்படி உத்தரவு போட்டுவிட்டு மெய்யம்மை யாச்சி வீடு சேர்ந்தாள். சொன்னபடி ஆண்டிச்சி சோறு போட்டு அழைத்துக்கொண்டு வந்தாள். மெய்யம்மை யாச்சியும் வந்த புதிய அம்மாளும் நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். வந்த அம்மாளுடைய அழகிய உருவமும் அன்பு மொழிகளும் அடக்கமான தோற்றமும் இனிய மென்மையான வார்த்தைகளும் இசை நலமும் மெய்யம்மை யாச்சியைக் கிறு கிறுக்கச் செய்துவிட்டன. ஊர் பேர் முதலிய வரலாறுகளைச் கேட்ட மெய்யம்மை யாச்சி தன்னேடிருக்கும்படி வேண்டிக் கொண்டாள்.

அம்மாள்:—எனக்கு வேலைகள் அதிக மிருக்கின்றன. இன்றைக்கே புறப்பட வேண்டும். உடலில் பல மிருக்கிற வரையில் உழைக்க வேண்டியதே மக்கள் கடமையாகும்.

ஆச்சி:—பிள்ளைகுட்டி வீடு வாசல் முதலிய ஒன்று மில்லை யென்று சொன்னீர்களே. இப்போது வேலை யிருக்கிறதென்று சொல்லுகிறீர்களே?

அம்மாள்:—அதுவும் பொய்யில்லை; இதுவும் உண்மை தான்.

ஆச்சி:—என்னம்மா நீங்கள் சொல்லுவது பெரிய பித்தலாட்டமாக விருக்கிறது. ஞானப் பயித்தியமோ?

அம்மாள்:—பயித்தியமில்லை. இந்த உலகத்தில் எனக்கு ஒருவருமில்லா விட்டாலும் இறந்த பிறகு நல்ல உலகத்துக்குப் போக வேண்டாமா? (தொடரும்.)



# ஒரு தர்பார்:

## கலெக்டரவர்களின் பேச்சு.

சென்ற சனிக்கிழமையன்று மாலை காரைக்குடி ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் ஹைஸ்கூலில் ஒரு விழா நடைபெற்றது. இராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் கனம் எஸ். வி. இராமமூர்த்தி அவர்கள், M. A., I. C. S., ஸ்ரீமாந் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களுக்கு அரசாங்கத்தா ரளித்துள்ள 'ராவ் பகதூர்' பட்டத்தின் சன்னதும் விருதும் கொடுப்பதற்காக ஒரு தர்பார் நடைபெற்றது. இந்தச் சந்தர்ப்பத்தை முன்னிட்டு ஹைஸ்கூல் கட்டிடம் முழுதும் கொடிகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. இந்நாட்டில் பல பிரமுகரும் உத்தியோகஸ்தரும் ஏராளமாய் வந்து குழுமியிருந்தனர். கலெக்டரவர்கள் வந்து ஆசனத் தமர்ந்ததும் மாணவர்களால் பக்திரசமான பாடல்கள் பாடப்பெற்றன. பிறகுகலெக்டரவர்கள் எழுந்து பின் வருமாறு பேசினர்கள்:—"கனவான்களே! கனம் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் ஆறு ஆண்டுகளாகக் காரைக்குடி யூனியன் போர்டு சம்பந்தமாயும் மூன்று வருடம் அதன் தலைவராகவும் இருந்து செய்த பெருத்த நன்மைகளுக்காக மேன்மை தங்கிய இராஜப்பிரதிநிதி யவர்கள் அவருக்கு மனமுவந்து அளித்துள்ள 'ராவ் பகதூர்' பட்டத்தின் சன்னதையும் விருதையும் கொடுக்கும் இந்த விழாவுக்கு நான் உங்களை அழைத்திருக்கிறேன். ஸ்ரீமாந் செட்டியாரவர்கள் தேவகோட்டை தாலுகா போர்டு, இராமநாதபுரம் ஜில்லா போர்டுகளிலும் மதுரை விடுதலை பெற்ற கைதிகளின் உதவிச் சங்கத்திலும் அங்கத்தினராக இருந்து வருகின்றார்கள். மேலும் அவர்கள் இந்த ஹைஸ்கூல் சங்கத்தின் தலைவராக விருந்து சற்றேறக்குறைய ஒரு லட்சம் ரூபா செலவில் இந்தக் சட்டிடத்தை நிருமித்து உதவியிருக்கின்றார்கள். கோயிலூர்—குன்றக்குடி சாலைக்காக ரூபா இருபதாயிரமும், மதுரையில் வில்லிங்டன் பெருமாட்டி பேரால் ஏற்பட்டுள்ள பிரசவஸ்திரீகள் சிசுக்களின் க்ஷேம சாலைக்காக ரூ ௧௦௦௦௦ மும் அளித்திருக்கின்றார்கள். சிதம்பரம் கோவிலில் ஒரு கட்டளை ஏற்படுத்தி ௧௪ வருட காலமாக நடத்தி வருகின்றார்கள். தங்கள் சுற்றத்தாருடன்கூடி ஒரு பொது ஊருணிக்காகவும் தண்ணீர்ப் பந்தலுக்காகவும் சுமார் ரூ ௧௦௦௦௦ வரையில் செலவு செய்திருக்கின்றார்கள். இவையாவும் அவர்கள் பொதுநன்மைக்காகச்செய்த அரிய வேலைகளின் பயனாகும். இதநன்மையான வேலைகளை யறிந்தே இந்தப் பட்டம் அவருக்கு அளிக்கப்பெற்றிருக்கிறது. ஸ்ரீமாந் சிதம்பரம் செட்டியாரவர்களுக்கு இந்த சன்னதையும் விருதையும் மிகுந்த சந்தோஷத்துடன் நான் அளிப்பதுடன் அவருக்கு நீண்ட ஆயுளும் செல்வப் பெருக்கும் இன்னும் உயர்ந்த கவுரவங்களும் கிடைக்க வேண்டுமெனப் பெரிதும் விரும்புகிறேன்."

பிறகு ராவ் பகதூர் சிதம்பரம் செட்டியாரவர்கள் எழுந்து தக்கபடி மறுமொழி கூறினார்கள். பிறகு கலெக்டரவர்கள் இந்த நல விழாவைச் சிறப்பிக்கத் தமது வேண்டுகோளுக் கிணங்கி அங்கு விஜயம் செய்திருந்த எல்லோருக்கும் வந்தன மளித்தனர். இது முடிந்ததும் கலெக்டரவர்களுக்கும் சில கனவான்களுக்கும் மேல்மாடியில் சிற்றுண்டி யளிக்கப்பெற்றுப் பின் புகைப்படமும் பிடிக்கப் பெற்றது. இறுதியில் அரச வாழ்த்துப் பாடப் பெற்றுக்கொண்டாட்டம் முடிவு பெற்றது. கலெக்டரவர்கள் ஸ்ரீ மீனுக்ஷிபெண்பாடசாலையையும் மாணவிகளின் ஆடல் பாடல்களையும் பார்வையிட்டுச் சென்றனர்.

## ஆங்கில முறை வைத்தியசாலைகள்.

(அரசாங்க அறிக்கை.)

சென்னை மாகாணத்தில் ௧௯௨௩-ம் ஆண்டு ஆரம்பத்தில் ௭௯௮ வைத்திய சாலைகள் இருந்தன. அவற்றில் அவ்வருடத்தில் ௧௦ வைத்தியசாலைகள் மூடப்பட்டன; ௧௮ புதியனதோன்றின. ஆக வருடக் கடைசியில் இருந்தவை ௭௯௮.

வைத்திய சாலைகளில் சில அரசாங்கத்தாரின் நேர் பார்வையில் இருக்கின்றன; மற்றவை தாலுகா போர்டு, ஜில்லா போர்டு, நகர பரிபாலன சபைகளின் கீழும், ரெயில்வே, பிற ஸ்தாபனங்களின் கீழும் உள்ளன. இவ்வைத்தியசாலைகள் ஆஸ்பிடல் என்றும் டிஸ்பென்ஸரி என்றும் இரு பிரிவினைகளை யுடையன. இவைகளில் பெண்பிள்ளைகள் சிசுக்களுக் கென்று பிரத்தியேகமாய் நடை பெறும் வைத்திய சாலைகளும் உண்டு.

௧௯௨௩-ம் ஆண்டில் முன் இரண்டு வருடங்களைக் காட்டிலும் அதிகமான பேர்கள் சிகிச்சைக்கு சென்றனர். இதற்கு மேனுட்டு வைத்திய முறை பொது ஜன சமூகத்தினரால்விரும்பப்படுவதுதான் காரணமென அரசாங்க வைத்திய இலாகா அதிகாரி கூறுவது ஆச்சரியமா யிருக்கிறது. நாடெங்கும் ஆயுர்வேத, யூனுனி, சித்த முறைகளாகிய உள் நாட்டு வைத்திய முறையைப் பெரிதும் விரும்பி நிற்கிறதென்பது சட்ட சபை விவாதங்களால் தெள்ளிதில் விளங்கும். இந்த வாரத்திலேயே ஒரு நாட்டு வைத்தியக் கலாசாலை நமது இராஜதானிப் பட்டினத்திலேயே அரசாங்கத்தாரால் நாட்டு வைத்தியத்தைப் பரவச் செய்யும் நோக்கத்துடன் ஏற்படுகின்றது.

சிகிச்சைக்காகச் சென்றவர்களின் நோய்களைச் சீர்தூக்கிப் பார்க்குங்கால், முறையே, சரும வியாதியினரும், கண்ணேயாளரும், சிரங்கு கொண்டோரும், காது நோயினரும், சுரத்தால் பீடிக்கப்பட்டோரும் வருகின்றனர். ௩,௯௬,௭௨௧ பேர் ரண வைத்தியம் செய்யப் பட்டனர். இவர்களில் மரணம் நூற்றுக்கு ௨.௪ வீதம் நேர்ந்திருக்கிறது. இது ரண வைத்தியர்களின் திறமையை விளக்குகிறதென்று வைத்திய இலாகா அதிகாரி கூறுகிறார். பிரஸ்தாப வருடத்தில் வைத்திய இலாகாவின் செலவு மொத்தம் ரூபா ௯௬௬௮௧௧; இதில் அரசாங்கத்தார்பொறுப்பு ரூ௨௧௧௧௭௦௧; ஸ்தல ஸ்தாபனங்களின் பொறுப்பு ரூ ௨௯,௧௮,௯௩௧.

௪மது நாட்டில் காரைக்குடி வைத்தியசாலை ௧௮௯௦-ம் ஆண்டு ஏற்பட்டது. இதில் சென்ற ௧௯௨௨-ம் ஆண்டில் ௧௯௬௭ பேர் மருந்தளிக்கப்பெற்றனர்; அதாவது நாளொன்றுக்கு ௬௩ பேர் வீதமாகிறது. இதற்குச் செலவு ரூபா ௪௦௭௭ ஆகியது; மருந்துச் செலவு மாத்திரம் ரூ ௧௧௮௧. தேவகோட்டை வைத்தியசாலை ௧௮௮௧-ம் ஆண்டு ஏற்பட்டது. இதில் சென்ற வருடம் ௧௧௮௧ பேர் மருந்தளிக்கப்பெற்றனர்; அதாவது நாளொன்றுக்குச் சராசரி ௬௭ பேர். செலவு ரூ ௨௮௧௩ ஆகியது. இதில் மருந்துச் செலவு மாத்திரம் ரூ ௯௧௯. ௧௯௨௦-ம் ஆண்டு ஏற்பட்ட தேவகோட்டை பெண்கள் வைத்தியசாலையில் ௯௦௬௧ பேர் மருந்து பெற்றனர்; அதாவது தினமொன்றுக்குச் சராசரி ௨௭ பேராகிறது. செலவு ரூ ௧௩௨௧.

## தமிழ் நாடு கதர் போர்டு, திருப்பூர்.

நவம்பர் மாத நூல் சந்தா

(கதர் போர்டு அறிக்கை)

இம்மாதம் ௬௪௯ பேர் நூல் சந்தா அனுப்பி யிருக்கிறார்கள். இவர்களில்

| | |
|---|---|
| அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் | ௧௩ |
| மாகாண கமிட்டி அங்கத்தினர் | ௪௮ |
| ஜில்லா கமிட்டி அங்கத்தினர் | ௪௦ |
| தாலுகா கமிட்டி அங்கத்தினர் | ௩௭ |
| அங்கத்தினரல்லாதவர்கள் | ௫௧௩ |

நூல் சந்தா அனுப்பி யுள்ளவர்களில் ௮௪ பேர் ஸ்திரீகள், ௨௧ பேர் மகமதியர், ௩ பேர் கிறிஸ்தவர்.

சந்தாக்களின் மொத்த எடை சுமார் ௧௧௦ ராத்தல்; மொத்தம் நீளம் ௧௫,௦௦௦,௧௧ கஜம். மதுரை ஸ்ரீமத் கே. ஆர். ஸ்ரீநிவாச பாகவதர் மற்றவர்களைக் காட்டிலும் அதிக நூல் அனுப்பி யிருக்கிறார். இவர் நூலின் நீளம் ௮௧௮௪௦ கஜம். அடுத்தபடி சேலம் ஸ்ரீமாந் ஆர். டி. சுப்பிரமணியம் ௧௩௪௪௦ கஜமும் ஊத்துக்குழி ஸ்ரீமாந் பி. கே. குப்புசாமி அய்யர் ௧௦௦௦௦ கஜமும் அனுப்பி யுள்ளார். திருப்புவனம் ஸ்ரீமாந் மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை வழக்கம் போல் மிகவும் நயமான நூல் அனுப்பி யுள்ளார். இவர் இம்மாதம் அனுப்பியிருக்கும் நூலின் நம்பர் ௨௫௮. சென்ற ௨ மாதங்களில் இவர் அனுப்பிய நூலின் நம்பர் ௧௫௧. இம்மாதம் சென்ற மாதத்தைக் காட்டிலும் ௬௭ பேர் அதிகமாய் சந்தா அனுப்பியிருக்கிறார்கள். சந்தாதாரர்களின் எண்ணிக்கை மாதாமாதம் இதே ரீதியில் விருத்தி யடைந்து வருமென்று நம்புகிறோம்.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.
—அருணகிரிநாதர்.

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி ஞ கார்த்திகைமீ கக௳.

## ஆங்கிலக் கல்வியும் நம்மவரும்.

நம்மவர்க்கு ஆங்கிலக் கல்வி அவசியமாயில்லையா வென்பதை நன்கு ஆராய வேண்டியது அவசியமாக விருக்கின்றது. ஆங்கில எழுத்தையும் ஆங்கிலச் சொல்லையும் கண்ணாற் காணக் கூடாதென்றும் காதாற் கேட்கக்கூடாதென்றுங் கருதுவாருமிருக்கின்றனர். அப்படி வெறுப்பது தேசாபிமானமென்று கருதுவாரு மிருக்கின்றனர். தேசாபிமானத்திற் கடிப்படையான காரியங்கள் பல விருக்கின்றன வென்பதை இவர்கள் உணரவேண்டுவ தவசியமாகும். ஆங்கிலத்தைப்படிப்பதால் ஒருவன் கெட்டுப் போவானென்று கூறுவது மூடத்தனமே யாகும். மகாத்மாவும் ஆங்கில பாஷையை வெறுத்தாரில்லை. ஆனால் இந்த அரசியற் போக்கிற் கிணங்கிய கலாசாலை முறையையே வெறுத் தொதுக்க வேண்டு மென் றருளுகின்றார். அந்த பாஷையை அறவே புறக்கணிப்பதாயின் காந்தியடிகள் "யங் இந்தியா" நடத்த மாட்டாரன்றோ? இந் நிகழ்ச்சியொன்றினாலேயே ஆங்கில பாஷையானது நம்மவர்க்கு இதுசமயம் இன்றியமையாததாகவிருக்கிறதென்பதை மகாத்மா அறிவிக்கிறார்களென்பது இனிது விளங்கவில்லையா?

இது போழ்து இந்தியர்க்கேயன்றி உலகினர்க்கே அவசியமாகும்படி ஆங்கில பாஷையானது பெரிய வியாபார பாஷையாகி விட்டதென்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளுதல் அவசியமாகும். மற்றையோர் விஷயம் ஒரு புறமிருக்க நம்மவர்க்கு எவ்வளவு அவசியமாகவிருக்கிறதென்பதைக் கவனிக்க வேண்டும். வியாபார முறையில் அன்னிய நாடுகட்குச் சென்று வருவோர் ஆங்கிலந் தெரியாமையால் எவ்வளவு கஷ்ட முண்டாகிறதென்பதை நன்றாகஅறிவர். தந்தி—தபால்களைப் படிக்கவும் பதிலெழுதவும் பத்திரிகை படிக்கவும் யாருடனும் நன்கு பேசவுமாவது கட்டாயம் தெரிந்து கொள்ளவேண்டுவதவசிய மாகும். வெளிநாடுகளில் சென் றிருப்போரைக் கவனித்து நோக்கினால் அந்நாட்டுச் சட்டந் தெரியாமலும் அந்நாட்டின் அவ்வப்போதைய நிகழ்ச்சிகளை யறிய முடியாமலு மிருப்பதால் எவ்வளவு நஷ்டமும் அனாவசியமான கஷ்டங்களும் உண்டாகின்றன வென்பது தெரியும். ஆங்கில பாஷையில் பேசுந் திறனிருக்குமானால் எளிதாக எந்த மேலதிகாரியையும், வியாபாரச் சக்கரத்தைக் கையில் வைத்துச் சுழற்றுகிற தலைவர்களையும் நேரில் கலந்து பேச முடியும். இல்லா விட்டால் இடையில் ஒருவரை வைத்துக் கொண்டு மனமாரக் கலந்து பேச முடியாமல் திண்டாடவேண்டியிருப்பது பலரறிந்ததே யாகும். மேலும் முற்காலத்தில் பதினெண் பாஷைகளையுங் கற்ற வல்லுநர் பலரிருந்தா ரென்பதை யறியாதாருண்டோ? இப்பொழுது வியாபார நலத்துக்காக மலாய், பர்மா, ஹிந்துஸ்தான், சயாம், அனம், சிங்களம் முதலிய பல பாஷைகளை நாம் கற்றுக் கொள்ள வில்லையா? உலகிலுள்ள எல்லா நாடுகளிலும் வழங்கக் கூடிய பெரும் பாஷையாகநிற்கிற ஆங்கிலத்தை அறவே பார்க்கக்கூடாது படிக்கக்கூடாது என்று கூறுவது மடமையே யன்றோ? அதிலும் வியாபாரத் துறையில் அந்நிய நாடுகளில் வசிக்க வேண்டியவராகவுள்ள நமக்கு ஆங்கில பாஷை மிக இன்றியமையாததாகு மென்று வற்புறுத்திக் கூறவிரும்புகிறோம். ஆங்கில அறிவில்லாமல் உலக நிலையை யுணரவும் பிற்கால அபிவிருத்திக் குரிய வழிகளை யுணரவும் முடியாதென்றே நாம் கருதுகிறோம். இதைப் பற்றிப் பின்னொரு முறை யெழுதுவோம்.

தமது குழந்தைகட்கு ஆங்கிலக் கல்வி யவசிய மென்பதை யுணர்ந்தார் பலர் கல்விச்சாலைகட்காக அலைந்து திரிகின்றனர். சென்னைக்கும் திரிச்சிக்கும் பிற விடங்கட்கும்பிள்ளைகளைப்படிப்பிப்பதற்காக அனுப்புவதால் கணக்கற்ற செலவு ஏற்படுகிற தென்பது பலரறிந்ததேயாகும். சில குழந்தைகட்குச் சென்னையிலிருந்து படிப்பதற்காக மாதம் மூன்னூறு ரூபா வரைசெலவிட்டு வருகின்றனர். இதனையொழிப்பதற்கு நமது ஊர்களிலேயே ஆங்கில கலாசாலைகளை யேற்படுத்திக் கொள்ளுதல் அவசியமாகும். தற்போதுள்ள ஆங்கிலக் கல்வி முறையை யொழித்துத் தேசீய முறையில் ஆங்கிலக் கலாசாலைகள் அமைக்கப்படுமானால் மிகச் சிறப்புடையதாகும். அம்மாதிரியான கலாசாலைகளை யுண்டாக்கி அதில் தமிழை முக்கிய பாடமாகவும் ஆங்கிலத்தைப் பாஷா ஞானமுண்டாகுமாறு உப பாடமாகவுங் கொண்டு போதிக்க வேண்டியதின்றியமையாத தாகும். இவ்வழியில் நம் நாட்டுச் செல்வர்கள் முன்னிற்பாராயின் பெரும்பயனை எதிர்பார்க்கலாம். இம் மாதிரியான கலாசாலைகள் இல்லாதிருக்கிற இதுபோழ்து செய்யக்கிடப்ப தென்னை? ஒரு குழந்தைக்கு ஒரு வாத்தியார் வைத்துப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதால் விசேஷமான பலன் கிடைக்க வில்லை யென்பது அனுபவத்தில் தெரிகிறது. பள்ளிக்கூடத்திற் சேர்ந்து முறையாகப்பல மாணவர்களுடன் கலந்து படிப்பதனாலேயே படிப்பு வளர்கின்றது. தற்போதுள்ள ஆங்கிலகலாசாலைகளில் பிள்ளைகளைப் படிப்பிக்கலாமன்றோ? வீணாக விளையாடித்திரிந்து பிற்காலத்தில் அறிவின்றி உலகுக்கும் சமூகத்திற்கும் பெருங்கேடு புரிபவராகுமாறு குழந்தைகளை வறிதே வளர்ப்பது பாவமே யன்றோ? வீண் பிள்ளையாக விருப்பதைக்காட்டினும் சிறிது அறிவாவது கிடைக்கப் பெற்றிருப்பது விசேஷ மில்லையா? ஆங்கில பாஷையில் பேசும்படியான அறிவுண்டாகும் வரையில் அரசாங்கச் சார்புடைய தாயினும் கலாசாலையிற் சேர்ந்து படிப்பது நலமென்றே கூற விரும்புகிறோம். அதாவது ஹைஸ்கூல் படிப்பு வரை படித்தல் போதியதாகுமென்று கூற வேண்டுவதில்லை.

## எண்டிசைக் காட்சி.

### கும்பகோணம் — — சங்கராசாரியார் வருகிறார்.

ஆதி சங்கராசாரிய சுவாமிகள் ஸ்தாபித்த நான்கு மடங்களில் கும்பகோணம் மடமு மொன்றென்று கூறுவாரு முளர்; இல்லை யென்பாரு முண்டு. வடநாட்டிலுள்ளவர் இதனை ஏற்பதில்லை யென்றறிகிறோம். இந்த மடத்தின் தலைவரவர்கள் இதுபோது இப்பகுதிக்கு விஜயஞ் செய்யப் போகிறார்களென்றறிகிறோம். சுவாமிகள் சுமார்த்தப் பிராமணருள் ஒரு சிலருக்கே ஆசாரியராவார்கள். சில பிராமணர்க்குக் குருவாக விளங்குகிற இவர்களைலோக குருவென்று கூறப்பட்டு வருவது ஆராயத்தக்க தாகும். இவர்கள் கற்று வல்ல பெரியாராயின் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் சைவர்களாய நாம் அன்னிய மதாசாரியார்க்குச் செய்யத்தக்க மரியாதையோடு நிற்பதுதான் நியாயமன்றி அளவு கடந்து செல்வது பிறர்நகைப்புக்கே இடமாகும். நம்முடைய மரியாதையை நாமே காப்பாற்றிக்கொள்ளுதல் அவசிய மன்றோ? இங்குள்ள பிராமணரின் ஆர்ப்பாட்டத்திற்கு அடிமைப்பட்டுத் தன்மதிப்பை யிழந்து விடக்கூடாதென்று நாம் எச்சரிக்கிறோம். இவர்களது குடையின் கீழ் நடை பெற்று[illegible]ருகிற "ஆர்யதர்மம்" எ[illegible]கயை நாம் கூர்ந்து[illegible]தன்". மகாத்மா [illegible] பெரும் பாலும் இ[illegible] நின்று குழி தோண்டுகிற தென்பதை இந்நாட்டு வாலிபர்க்கு நினை வூட்டுகிறோம்.

### தாலூகா போர்டின் தலைவர்.

தேவகோட்டைத் தாலூகா போர்டின் புதிய தேர்தல் நடை பெற்று விட்டதென்பதை நேயர்கள் அறிவார்கள். மற்ற தாலூகா போர்டுகட்கு எலெக்ஷன்மூலம் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்ட காலத்திலேயே நமது தேவகோட்டைத் தாலூகா போர்டுக்கு அரசாங்க உத்தியோகஸ்தரான ஸ்ரீமான் மாணிக்கம்பிள்ளையவர்கள் நியமிக்கப்பட்டார்கள். இப்பொழுதாவது அங்கத்தினர்கட்குத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடைக்குமா வென்றால், அதற்குரிய அறிகுறிகள் காணப்படவில்லை. ராவ்பகதூர் ஸ்ரீமான்கள் அ.மு.மு. முருகப்ப செட்டியாரவர்கள் பெயரும் கோவிந்தராயர் அவர்கள் பெயருங் குறிப்பிடப்படுகின்றன. இவர்களைப்பற்றி நாம் எந்த ஆக்ஷேபணையுங் கூறவில்லை. ஆனால் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை போர்டின் அங்கத்தினர்களின் கையில் இருக்கவேண்டியதே நியாயமாகும். சட்டமும் அப்படியே சொல்லுகிறபோது ஏன் இவ்வுரிமை அங்கத்தினருக்குக் கொடுக்கப்படாமல் பிடுங்கப்படுகிறதென்பது கவனிக்கத் தக்கதாகும்.

### தலைவர் மகாநாடு.

பம்பாயில் கூடிய தலைவர் மகாநாடு சிறப்புற நடைபெற்றிருக்கிறது. நமது தெய்வத் திருநாட்டிலுள்ள தலைவர்கள் யாவரும் ஆங்கு பொலிவுறத்தோன்றினர். தங்களுடைய கட்சிகளில் மிகுந்த பற்றுள்ளங் கொண்டிருந்தார்களாயினும் பொதுக்காரியங்களில் எப்படி ஒத்து நிற்கவேண்டு மென்பதை எதிரிகள் நாணும் படிகாட்டிவிட்டனர். கட்சிபேதங்கள் விசேஷமாகப் பாராட்டப் படவில்லை, கொடுமையான வங்காள அடக்கு முறையைக்கண்டிப்பதில் யாவரும் ஒரு முகங்காட்டினர். யாவற்றுக் கட்சியாரும் ஒன்று சேர்ந்த மகா நாடாகப் பெல்காம் காங்கிரஸ் விளங்க வசதியில்லாவிடினும் எல்லாக் கட்சிகளின் மகா நாடுகளும் அங்கேயே நடைபெறு மென்று நம்ப இடமிருக்கிறது. சுயராஜ்யத் திட்டம் போடுதற்குக் கமிட்டி நியமிக்கப் பெற்றிருப்பது ஒரு முக்கியமான விஷயமாகும். இப்போது தேசமிருக்கிற நிலையில்—கட்சிகள் அளவு கடந்து வளர்ந்திருக்கிற நிலையில்—இவ்வளவு தூரம் ஒற்றுமை யேற்பட்டிருப்பதை நாம் நமது புண்ணியப் பேறென்றே கருதுவோம்.

### "சக்தியிருந்தால் — — யுத்தஞ் செய்வேன்"

மகாத்மா அவர்கள் தலைவர் மகாநாட்டில் செய்த அரியதொரு பிரசங்கத்தினிடையில் பின்வருமாறு அருளியிருக்கிறார்கள்.

'திறமையை மேலே மேலே உண்டு பண்ணிக் கொள்வதற்காக ஸ்வராஜ்யக் கட்சியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறேன். எனக்குச் சக்தியிருந்தால் ஸ்வராஜ்யக் கட்சியாருடன் இன்றைக்கே யுத்தஞ் செய்வேன்; ஆனால் முடிய வில்லை. நானும் ஸ்வராஜ்யக் கட்சியாரும் பரஸ்பரம் விட்டுக் கொடுத்துத்தான் கல்கத்தா ஒப்பந்தம் தயாரித்திருக்கிறோம். ஸ்வராஜ்யக் கட்சியாருக்கு காங்கிரஸில் சம அந்தஸ்து கேட்க பாத்திய முண்டு. தேசத்தை இச்சமயத்தில் பிளவு படுத்திவிட்டு அப்புறம் என்ன செய்வது? ஸ்வராஜ்யக்கட்சியின் பலம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. தேசத்திலுள்ள புத்திசாலிகள் சட்ட சபைக்குப்போய் வேலைசெய்வதில் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். போகாவிட்டால் முன்னேற முடியாதென்று அவர்கள் கருதுகின்றனர்.'

மக்களிடத் தன்புகொண்டுழைக்கும் உத்தமரின் மனம் காலமறிந்து, இடமறிந்து, வினையறிந்து செல்கிற தென்பது இதிலிருந்து விளங்குகிற தன்றோ?

### "தலை சுற்றுகிறது."

தலைவர் மகாநாட்டில் அடிகள் பேசியிருப்பதை ஊன்றிப் படிக்கும் அன்பர்கள் அவர்களது தேசபக்தியின் பெருமையை உணர்வர். அதில் ஈடுபட்டுப் படித்து மொருவர் கண்ணீர் விட்டுக்கரைந்துருகுவ தல்லது வேறு செய்வதற்கென்ன விருக்கின்றது? "ஸ்வராஜ்யம் கைக்கெட்டாவிடினும் கண்ணுக் கெட்டிய தூரத்திலாவது வரச் செய்யவேண்டும்? ஸ்வராஜ்யத்துக்கு இன்னும் குறைந்தபக்ஷம் இருபத்தைந்து வருஷமாவது செல்லுமென்று சிலர்நினைக்கிறார்கள்; நான் அப்படி நினைக்க வில்லை; இருபத்தைந்து என்று நினைக்கும்போது என்தலை சுற்றுகிறது" என்று அடிகள் மொழிந்ததை அன்பர்கள் ஊன்றிநோக்குவாராக.

### தனவைசிய நாட்டைத் — — தனிப்படுத்த யோசனை.

இராமநாதபுரம் ஜில்லாவில் சேர்ந்திருப்பதான தனவைசியர் வசிக்கின்ற பாகத்தைப் பிரித்துத் தனிஜில்லாவாக்க வேண்டு மென்ற யோசனையைப்பற்றித் திருவண்ணாமலையில் கூடிய காங்கரஸ் கமிட்டிக் கூட்டத்தில் யோசிக்கப் பெற்றது. புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள சில ஊர்களைப் பிரித்துப் புதிய ஜில்லாவில் சேர்ப்பது அவசியமாகின்றது. புதுக்கோட்டையைப் பிரிப்பதால் பாதகமுண்டென்றும், நற்றல் வேலை அங்கு நன்றாக நடைபெறுகிற தென்றும், பிரித்துவிட்டால் சமஸ்தானத்திற்குள் இரண்டுவித லட்சியங்களேற்படக் கூடுமென்றும் ஸ்ரீமான் சத்தியமூர்த்தி கூறியிருக்கிறார். புதுக்கோட்டையைப் பிரித்து ஒரு பாகத்தை தனவைசிய நாட்டிலும் மற்றொருபாகத்தைத் திருச்சிஜில்லாவிலும்சேர்த்துப் பார்க்கலா மென்று ஸ்ரீமாந் ராஜகோபாலாச்சாரியார் சொல்லி, ஸ்ரீமாந் அரங்க



பிருங்கு, கார்த்திகைமீ கூ௳
சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்தைந்து.

ஈயம் விலை நூற்று இருத் தோன்பது.

ரப்பர் விலை எண்பத்தொன்று.

இரங்கூன், கார்த்திகை கூ௳

| | |
|---|---|
| படகு நெல் | உகஉ-0-0 |
| ரெயில் நெல் | உகரு-0-0 |
| ஆலை அரிசி பெரிது | சகூ0-0-0 |
| ஆலை அரிசி சின்னது | ருச0-0-0 |
| வெள்ளை பீன்சு | ௩ருரு-0-0 |
| சிவப்பு பீன்சு | ௩எ0-0-0 |
| கொள்ளு | சகூரு-0-0 |
| உளுந்து | ௩ச0-0-0 |
| துவரை | ச௩0-0-0 |
| பாசிப்பயறு | ச௦0-0-0 |
| எள் | எ00-0-0 |
| தங்கம் | ௩ச-அ-0 |
| பவுன் விலை | கச-கக-0 |
| வெள்ளி | அஎ-அ-0 |
| ஐப்பசி நடப்பு வட்டி | 0-௧0-சு |

பணம் மந்தம்.

(த. வை. ஊ.)

சாமி ஐயங்கார் எல்லாவற்றையும் விடச் சமஸ்தான முழுமையும் தனவைசிய நாட்டில் சேர்த்து விடுதல் நலமென்றார். கடைசியில் புதிய காரியக் கமிட்டியார் யோசித்து மாகாணக் கமிட்டிக்கனுப்பும் யூதாஸ்தின் மேல் தீர்மானிப்ப தென்று முடிவு செய்திருக்கின்றனர். நமக்குச் சமஸ்தானத்தைப் பற்றி ஆக்கரை யில்லை. எங்குமே ஒரு அபிப்பிராயமாக விருக்கப் போவதில்லை யென்பது கவனிக்கத் தக்கது. வேலை செய்வதற்கு தனவைசியர்கள் வசிக்கின்ற பாகம் தனியாக விருப்பின் தற்போது நமக்கிருக்கிற அலுவல்களின் தன்மையைப் பொறுத்த வெகு சௌகர்யமாக வேலைகளை நடத்தலாம். மற்றப்படி யெப்படிப் பிரித்த போதிலும் நமது வாலிபர்கள் முனைந்து வேலை செய்வது குறைவுபடுமென்பது திண்ணம்.

## உள்ளூர்.

**திருக்குறட் கழகம்:**—இக் கழகத்தின் இரண்டாவது கூட்டம் இந்துமதாபிமான சங்கத்தில் சென்ற ஞாயிறன்று மாலை சு-௩0 மணிக்குக் கூடியது. புதிய அங்கத்தினர் பலர் சேர்ந்தனர். திருக்குறள் முதல் அத்தியாயம், கடவுள் வாழ்த்தில் முதலிரண்டு குறட்பாக்களும் ஆராய்ச்சி செய்யப் பெற்றன.

## குன்றக்குடி.

குறித்தபடி தாளிது கூ௳ வெள்ளியன்று மாலை நான்கு மணிக்கு ஜில்லா கலெக்டர் ஸ்ரீமாந் எஸ். வி. ராமமூர்த்தி,எம். ஏ., ஐ. சி.எஸ். அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அன்னதான மடத்தின் முன் அழகுபடுத்தப் பெற்றிருந்த கட்டிடத்திற்குமுன் ராவ் பகதூர் கோவிந்த ராவ் அவர்களின் ஜாகையிலிருந்து வெகு விமரிசை யுடன் கலெக்டரவர்களை அழைத்து வந்தனர். தேக்கச்சேரி நடை பெற்றது. ஸ்ரீமாந் கோவிந்த ராவ் அவர்களால் ஆங்கிலத்தில் ஒரு வந்தனோபசாரப் பத்திரமும் தர்மஸ்தாபகர் ஸ்ரீமாந் மரு. சு. சுப்பையா செட்டியாரவர்களால் தமிழில் ஒரு வந்தனோபசார பத்திரமும் வாசிக்கப் பெற்றன. கலெக்டர் அவர்கள் குன்றக்குடி ஸ்தலத்திற்கு ஒரு தர்ம வைத்திய சாலை மிக அவசிய மென்பதைப்பற்றியும் அதை யேற்படுத்த முன் வந்த ஸ்ரீமாந் மரு. சுப்பையா செட்டியாரவர்களைப் பாராட்டியும், இவர்கள் இத்தருமத்தைச் செய்வதற்குக் காரணமாக விருந்த நகரத்தாருக்கும் தூண்டு கோலாயிருந்த ஸ்ரீமாந் கோவிந்த ராவ் அவர்கட்கும்ஆசிகூறியும் சில வார்த்தைகள் பேசினார்கள். கட்டிடம் கட்டும் வரை தற்கால ஏற்பாடாக அக்கட்டிடத்தில் வைத்தியசாலையைத் திறந்து வைத்தார்கள். பின்னர் வடக்கு வீதியில் ராயவரத்தார் மடத்திற்குமேற்கிலுள்ள நிலத்தில் புதிதாக வைத்தியசாலைக்குக் கட்டிடம் கட்டுதற்கு கலெக்டர் அவர்களால் அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டது. அதற்கெனச் செய்து கொடுக்கப் பெற்ற வெள்ளிக் கரண்டியையும் வந்தனோபசாரப் பத்திரத்தை வைத்துக் கொடுத்த வெள்ளிக் குழாயையும் வைத்தியசாலைக்குத் தமது நன்கொடையாக விருக்கட்டு மென்று கொடுத்தது கலெக்டரின் பொது ஜனப் பற்றையும் திறமையையுங் காட்டுகிறது. பிறகு மலைக்கு அழைத்துச் செல்லப் பெற்றார்கள். அங்கு சந்தனக் காப்பலங்காரம் செய்யப் பெற்று எம்பெருமான் திருமேனி பொலிவுற்று விளங்கியது. தரிசனம் செய்துதிரும்பியதும்கலெக்டர்மாநகரி இருப்பிடத்துக்குப்புறப்பட்டார். ஆங்குவிஜயஞ்செய்திருந்தகனவான்கட்குஇரவு போஜனம் அளிக்கப்பட்டது. யாவருக்கும் பொதுவாக நன்ருக மரியாதைகள் செய்யப் பட்டன வென்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## வையாபுரியில் கும்பாபிஷேகம்.

இவ்வூரில் சுப்பிரமணியர் ஆலயம் ஒன்று உளது. அதில் ஸ்தூபி வெகு நாட்களுக்கு முன்னுல் கீழே விழுந்து விட்டதால் பல நண்பர்கள் புதிய ஸ்தூபி வைத்துக் கும்பாபிஷேகம் செய்ய முயற்சித்தனர். அதனை புதுக்கோட்டை அரசாங்கத்தார், அரசாங்க ஆலயமாதலால், கவனித்து காளது மீ உசஉ யுன்று கும்பாபிஷேகத்தினை நடாத்தி வைக்கும்படி அநுமதி கொடுத்திருந்தனர். அப்பால் கூழிபிறை தனவைசியர்களில் சிலர் அரசாங்கத்தார் கொடுக்கும் பொருளினுல் விமரிசையாக நடை பெறுமெனு உத்தேசித்துப் பல தனவைசியர்களிடம் பொருள் சேகரம் செய்து ஷை உசஉ காலை க மணிக்கு ஸ்தூபி வைத்துக் கும்பாபிஷேகத்தினை வெகு சிறப்பாகச் செய்து வைத்தார்கள். நகர விருந்தும் பிராமண போஜனமும் நடைபெற்றன. அன்றிரவு வள்ளி தெய்வானை சமேதராக ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு சகல ஆடம்பர வைபவங்களுடன் ஊர் வலம் நடைபெற்றது. அவ்வமயம் கூழிபிறை சிவனடியார் திருக்கூட்டத்தாரின் தேவார திருவாசக முதலிய பஜனைகள் பல இன்னிசைக் கருவிகளோடு நடைபெற்றன என ஒரு நிருபர் எழுதுகிறார்.

## இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்

காளது ரக்தாக்ஷி ஸு கார்த்திகை மீ கூ௳ திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் கூடியது. அதுகாலை திருவாளர் அ. ப. சொ. சோமசுந்தரஞ் செட்டியா ரவர்கள் அலி சகோதரர்களின் தாயார் பீ அம்மன் இம்மண்ணுலகை நீத்தது பற்றி நமது அநுதாபத்தை அலி சகோதரர்களுக்குத் தெரிவிக்க வேண்டு மென்று பேசினார்கள். அதனை சித. ஷண்முகம் பிள்ளை அவர்களும் நா. இராமச்சந்திர ஐயரவர்களும் ஆதரித்துப் பேசித் தந்தி சொல்வதாகத் தீர்மானிக்கப் பெற்றது.

ஸா. கணேசன், காரியதரிசி.

## தந்திமூலம் விரற்குறி.

குற்றவாளிகளின் கை முத்திரை அடையாளங்களைத் தந்தியில் அனுப்ப லண்டன் ஸ்காட்லண்டு யார்டில் இப்பொழுது வழிகண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. லண்டனில் இருவர் கைது செய்யப்பட்டனர். இவர்களில் ஒருவன் திருடன். அவன் ஆஸ்டிரேலியாவில் தண்டிக்கப் பட்டவன். மற்றவனைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. தான் திருடனல்ல வென்று அவன் மறுத்தான். போலீஸார் அதை நம்பாமல் ஆஸ்டிரேலியாவுடன் இதைப்பற்றி ஸ்காட்லண்டு யார்டிலிருந்து கை முத்திரைகள் தந்தியில் அனுப்பப்பட்டன. இதற்கென்ற விசேஷ சமிக்ஞைகள் உபயோகப்படுத்தப்பட்டன. மறுநாள் ஆஸ்டிரேலியாவிலிருந்து இவன் எவ்வளவு தண்டனைகள் அடைந்திருக்கிறு னென்ற தகவல் கிடைத்துவிட்டது. இந்த விவரங்களைச்சொன்னவுடன் அவனும் தான் திருடனென்பதை ஒப்புக் கொண்டு விட்டான்.

## கப்பற் செய்தி.

'தாரா' கப்பல் மலாய் நாட்டிலிருந்து கார்த்திகைமீ களஉ சென்னை வந்து சேரும். உ-உஉ ஞாயிற்றுக்கிழமை நாகையிலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

'எக்ரா' கப்பல் இரங்கூனிலிருந்து கூ௳ திங்கட்கிழமை சென்னைக்கு வந்து சேர்ந்தது; ககஉ வெள்ளிக்கிழமை சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படும்.



## கதரும் நூற்றலும்.
### ஒரு இனிய சம்பாஷணை.

('யங் இந்தியா'விலிருந்து எடுத்தது.)

**மகாத்மா:**—'யங் இந்தியா' கடைசிப் பதிப்பில் வெளியான எனது வியாசம் தங்களுக்குப் பிடிக்கவில்லையே! ஆனுல் எனது கட்சி அசைக்க முடியாதது என்பதைத் தாங்கள் அறிய வேண்டும். அதன் இறுதி வாசகத்தில் தாங்கள் கவனம் செலுத்தாததால்தான் தாங்கள் என் வியாசத்தை ஒப்புக் கொள்ள வில்லை. எதேச்சையாக நூற்பதே தேச விடுதலைக்கு இன்றியமையாத தென்று நம்புகிறவர்களை நோக்கியே அவ்வேண்டுகோள் செய்யப்பட்ட தென்று இறுதியில் தெளிவாய்க் கூறி யிருக்கிறேன். உ000 கஜம் நூல் நூற்று அனுப்ப வேண்டிய நிபந்தனையை ஒப்புக் கொள்வதில் அவர்களுக்குக் கஷ்டம் ஒன்று மிராது. கட்டாயத்துக் கல்லாது சுயேச்சையாக நூற்பதாகச் சொல்வோர், ராட்டினத்தை சுழற்றுவதையே நிபந்தனை யாகக் கொண்ட ஒரு ஸ்தாபனத்தைச் சேர்வதில் தடையொன்று மிராது.

**ஆந்திரூஸ்:**—தங்களுடைய சொந்தத் தனியான ஸ்தாபனத்தின் வாயிலாக இந்தியாவின் ஜனத் தொகையில் நூற்றுக்கு அ0 பேரை நூற்கும்படிசெய்து அதன்பிறகுதேசியசபையில் அங்கத்தின ராவதற்கு நூற்பதை ஒரு நிபந்தனையாக ஒப்புக் கொள்ளும்படி செய்வதில் ஆட்சேபனை யில்லை. இப்போதுள்ளபடி குதிரைக்கு முன் வண்டியை வைக்கிறீர்கள்.

**மகாத்மா:**—அப்படியன்று ; நான் கூறுவது முற்றும் பொருத்தமானதேயாம். யாதொரு சங்கத்துக்கும் தனது அங்கத்தினர் சில கடமைகளை நிறைவேற்ற வேண்டுமென வற்புறுத்த உரிமை யுண்டோ, இல்லையா? அந்தக் கடமை யாதொரு அங்கத்தினரின் மனதுக்கு ஒவ்வலாம், ஒவ்வாமலுமிருக்கலாம். ஆனுல் எங்களுக்கு அந்தக் கடமையை ஏற்படுத்த உரிமை யில்லை யென்று தாங்கள் சொல்ல மாட்டீர்களென்பது நிச்சயம்.

**ஆந்திரூஸ்:**— இப்போது நான் அறிய விரும்புவது யாதெனில்,காங்கிரஸ் பொதுஜன அபிப்பிராயத்தை வெளியிடுவதா, அன்றி ஒரு சிறு குழுவினரின் அபிப்பிராயத்தைக் கொண்டதா? காங்கிரஸ் தேசீய மகா சபையாக விருக்குமா, அன்றி ஒரு சிறு ஆலோசனை சபையாகுமா?

**மகாத்மா:**—அது தேசீய மகா சபையாகவே யிருக்கும். எனது அநுபவ ஞானம் தவறு என்று தாங்கள் தாராளமாய்க் கூறலாம். காங்கிரஸுக்கு தனது அங்கத்தினரின்மீது சில ஏறத்துக்களை ஏற்படுத்துவதற்கு உரிமையுண்டு என்பதைத் தாங்கள் ஒப்புக்கொண்டால், பிறவற்றைச் சுலபமாகத் தாங்கள் அறிந்து கொள்ளும்படி நான் செய்யக்கூடும்.

**ஆந்திரூஸ்:**— காங்கிரஸை ஒருசாரான ஸ்தாபனமாகத் தாங்கள் செய்யலாகாது. அது தேசமக்கள் தம்மிச்சைப்படித் தேர்ந்தெடுக்கும் ஸ்தாபனமாயிருக்க வேண்டும்.

**மகாத்மா:**—காங்கிரஸ் யாதென்று தாங்கள் இன்னும் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை, இன்று அது ஒரு வரையறுக்கப்படாத கட்டுப்பாட்டுக்கு உட்படாதஸ்தாபனமாய்இருக்கும்படி நேர்ந்திருக்கிறது. அதன் சட்டதிட்டங்களி லிருந்து அறிந்து கொள்ளக்கூடியதை விட, அதிகமான விஷயம் அதனிட மிருக்கிறது, காங்கிரஸ் உண்மையாகவே குடிகளின்ஸ்தாபனமாயிருந்தால்,அதன் சட்டதிட்டங்கள் இப்போ திருப்பதை விட அதிகமான பலமுள்ளவையாகவும் மிகுந்த கண்ணியமாகவும் இருக்க வேண்டும்; தேச மக்களின் தேவைகளை உண்மையாகப் பூர்த்திசெய்ய வேண்டும். எங்களுக்கு எண்ணிக்கை தேவை யில்லை. நாலணா சந்தாவை அங்கீகரிக்கும்படி செய்த போது, காங்கிரஸ் ஒரு பலமான ஸ்தாபனமாகி விடுமென நம்பியிருந்தேன். ஆனுல் வேலை செய்வோர் கிடைக்க வில்லை. இன்று எமது நாடு சுகவாசிகளும் மனக்கோட்டை கட்டுவோரு மடங்கிய நாடாக விருக்கிறது. கோடிக் கணக்கான வாயற்ற மன்பதைகளைப் பற்றிக் கூறவில்லை. அவர்கள் வறுமையினுலும் அடிமைத் தனத்தினுலும் அழுத்தப் பட்டிருக்கின்றனர். ஆனுல் நான் குறிப்பிட்டது நம்மைப் பற்றியே—அறிவாளிகளென்றும் வாயாடிகளென்றும் சொல்லப் படுவோரையேயாம். இவர்களெல்லோருக்கும் ராட்டினத்திலன்றி வேறு எவ்வகையில் நான் வேலை யளித்தல் கூடும்? வேறு எவ்வகையில் காங்கிரஸ் ஒரு வேலை செய்யும் ஸ்தாபனமாகச் செய்தல் கூடும்? மாதத்துக்கு இரண்டாயிரம் கஜம் நூற்கும் யோசனையினுல்அதுமுடியு மென்பதுஎனது நம்பிக்கை.இப்போதுள்ள நிலையில் ஏகோபித்த முயற்சி என்பதே கிடையாது. நான் வாளைவீசுவேனென ஒருவர் கூறுகிறார். மற்றொருவர் நெய்க்க வேண்டு மென்கிறார். இன்னொருவர் தன் மனதுக் குகந்த வேறொரு காரியத்தில் கவனம் செலுத்த விரும்புகிறார். இதனுல் ஒன்றும் முடிவதில்லை. எல்லாச் சக்திகளையும் ஒரு விஷயத்தின்மீது ஒருமுகப்படுத்தித் தக்க பலனடைவதே எனது லட்சியமாகும்.

**ஆந்திரூஸ்:**— நூற்றலையும் கதராடை புனைவதையும் முக்கிய அங்கமாகக்கொண்டு ஒரு நூதனமான மதத்தை நிறுவப் போகிறீர்களென நான் அஞ்சுகிறேன் இன்னர் இன்னர் கதர் அணிகிறாரெனறுவது விதேச ஆடை அணிகிறாரென்றுவது நான் என் முக்கியமாய்க்கவனிக்க வேண்டும்?நான் [illegible] ாய் அறியவேண்டியதெல்லாம் ஒழுக்கநிலையில் அவரது மதிப்பு [illegible] ன்பதேயாம். ஒரு மனிதனை [illegible] மதிப்பிடும்போது அவனது [illegible] நூற்றத்தினுலன்றி மனத்தைக் கொண்டே நிதானிக்க வேண்டுமெனக் கிறிஸ்துமொழிந்துள்ளார்.

**மகாத்மா:**— கிறிஸ்தவக் கொள்கைகளுக்கும் இந்து கொள்கைகளுக்கும் வேற்றுமை யுண்டு.

**ஆந்திரூஸ்:**—அடிப்படையான ஆட்சேபனையைச் சொல்லுகிறேன். அமெரிக்காவில் சட்ட திட்டங்களினுல் குடியை ஒழிப்பதற்கு முன் அவர்கள் செய்ததுபோல நாமும் உண்மையாகவே அடிப்படையான வேலைகளைச் செய்யமுயற்சிக்கிறோமா?

**மகாத்மா:**— நான் எப்போதும் அஸ்திவாரமான வேலைகளைச் செய்துகொண்டுதானிருக்கிறேன். நான்கு வருடம் கஷ்டப்பட்டு உழைத்ததின் பயனுகவே நாம் இப்போதுள்ள நிலைமையிலிருக்கிறோம். நெடு நாளைக்குமுன்பே நூற்பதின் முக்கியத்தை காங்கிரஸ் அங்கீகரித்து விட்டது. மேலும் இரு தேசங்களிலு முள்ள நிலைமைகள் வேறு பாடுடையன. அமெரிக்கா குடி மிகுந்த நாடாயிருந்தது. அங்கே ஜனங்கள் குடியினின்றும் விடுவிக்கப்பட வேண்டியவராயிருந்தனர். அதற்கு முன் அவர்கள் செய்யாத ஒரு காரியத்தைச் செய்ய வேண்டியவராயினர். இங்கேயோ, நெடுங் காலமாக அவர்களுக்குரிய தொழிலாயிருந்து சொற்ப காலமாகக் கைவிடப் பட்டிருக்கும் ஒரு தொழிலை ஜனங்கள் மீண்டும் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். அவ்வளவே. இன்னும் 'உண்மையாகிய முயற்சி எதுவும் வீணுகாது; உண்மையான முயற்சிக்குத் தடை எதுமில்லை. இந்தக் கடமையைச் சிறிதேனும் ஆற்றுவதால் சங்கடங்களிலிருந்தும் காக்கப்படுவாய்' என்பது கீதா சுலோகத்தின் பொருளாகும்.

**ஆந்திரூஸ்:**—தாங்கள் என் அவ்வாறு புகல வேண்டும்? அதனுல் (காலமும், சக்தியும், முயற்சியும்) வியர்த்தமாகின்றன. நாமெல்லோரும் வேறுவிதமான வேலைக்கு ஏற்றவர்கள். இதர வேலைகளில் கவனத்தை மிகுதியாகச் செலுத்துவதால் நூற்பதற்கு அரைமணி நேரமும் செலவிட முடிய வில்லை. மகாதேவர் நூற்கும் பொருட்டு நள்ளிரவிலும் அரைமணிநேரம் உட்கார்ந் திருப்பதைக் கவனித் திருக்கிறேன். ஒற்றுமை மகா நாடு நடைபெறுகையில் நடு ராத்திரியிலும் மவுலானு மகம்மதுஅலி சுறு சுறுப்பாய் நூற்றுக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். இவையெல்லாம் எதற்காக வென்று ஆச்சரியப்படுகிறேன்.

**மகாத்மா:**—இந்தநண்பர்கள் நடுஇரவில் நூற்கவேண்டியிருந்தது அவர்களின் ஒழுங்கற்ற பழக்கங்களையும் காலத்தைப்பற்றிய அறிவின்மையையும் காட்டுகின்றது. அவ்வளவு தான்.

**ஆந்திரூஸ்:**—அரைமணி நேரக் கட்டாயத்தை யன்றி, தாங்கள் நூற்பதில் மனதைச் செலுத்தும்படி பேச ஆரம்பித்ததிலிருந்து மற்றக்காரியங்கள்

ஒதுக்கப்பட்டு விட்டதாக எனக்குத் தெரிகிறது. கதர் பிரசார வேலையில் அபரிமிதமான சக்தி செலவிடப்படுவதால், கஞ்சா, அபின், மதுபானம் முதலிய தீங்குகளை யொழிக்கும் அவசர வேலை உண்மையாகவே கைவிடப்படுகிறது.

மகாத்மா:—நூற்பதைச் சிபார்சு செய்வதில் சாமான்ய ஜனங்களின் மனதுக்குப் பிடித்ததாயும் ஒற்றுப்படுத்தும் சக்தி வாய்ந்ததாகவுமுள்ள ஒரு வேலை முறையைத்தேசத்தின் முன்பாக வைக்கவேண்டு மென்பதே எனது நோக்கம். நூற்கவேண்டுமென்பதினால் இதர வேலைகளை ஒதுக்கி வைத்து விடவேண்டு மென்பது அர்த்தமல்ல. கள்ளுக்கடை மறியலை நிறுத்திவைத்திருப்பது கதர் பிரசாரத்தில் மனதைச் செலுத்துவதற்காகவன்று; ஆனால் சச்சரவுகளுக்குப் பயந்தே. கதர் பிரசாரத்தில் செலுத்தவேண்டிய கவனத்தைப் போல் வேறு வேலைகளில் அவ்வளவு கவனம் செலுத்த வேண்டிய அவசியமில்லை. சகலரும் குடி நிறுத்தப் படவேண்டியதென ஒப்புக் கொள்ளுகின்றனர். இதில் புதிதாய் ஜனங்களுக்குச் சொல்லக் கூடியது எதுவுமில்லை. சுயராஜ்யம் நிறுவப்பெற்ற பின்னரும் சிற்சிலர் குடித்துக் கொண்டு தானிருப்பர். சுயராஜ்யத்துக்குப்பின் அவர்களைப் பற்றி கவனம் செலுத்த வேண்டும்.

ஆந்திரநஸ்:—அபின் வியாபாரத்தை நிறுத்துவதற்குப் பலத்த வேலைகள் செய்யவேண்டியது அவசியமில்லையா? அது அவசிய மென்பதைத் தேசம் உணர்ந்திருக்கிறது.

மகாத்மா:—நானும் அதை நம்புகிறேன்.

ஆந்தி:—ஆலைகளில் வேலை செய்யும் பெண்கள் தங்கள் குழவிகளுக்கு அபின் ஊட்டுகின்றன ரென்பது தங்களுக்குத் தெரியுமோ?

மகாத்மா:—ஆம்; ஆனால் இவ் வழக்கம் எமது வாழ்வில் வேரூன்றி விட்டதென்று கூறி விடாதீர்கள், இன்னும் அதிக தூரம் இவ் வழக்கம்செல்லும்படி தேசம் விட்டு விடு மென்று நினையாதீர்கள். குழந்தைகளைப் பற்றியவரையில், கூலியாட்களுக்குக் கல்வி, வைத்திய உதவிகளும் பெண்கள் வேலை செய்ய வேண்டிய நேரமும் இன்னும் அவர்களைக் காப்பதற்கு வேண்டிய வேறு விஷயங்களும் கவனிக்கப்பட வேண்டியிருக்கின்றன.

ஆந்தி:—தீண்டாமை, இந்து முஸ்லிம் ஒற்றுமை, கதர் ஆகிய மூவகை வேலைத் திட்டத்தைத் தாங்கள் நிர்ணயித்துவிட்டுக்குடி, விஷயத்தைத்தள்ளி விட்டபோது, அது விசனிக்கத்தக்க சம்பவமென எனக்குப் பட்டது.

மகாத்மா:—அவ்வாறன்று; நான் ஒரு போதும் அதனை மறந்துவிடவில்லை. வாஸ்தவமாகவேஜனங்களிடம் எடுத்துச் சொல்லுவதற்கு அதில் நூதன விஷயம் எதுவுமில்லை.

ஆந்தி:—அப்படியல்ல; அபின் விஷயத்தில் கவனம் செலுத்தும்படிஜனங்களிடம் சொல்லுவது அசாத்தியமாகி விட்டது.

மகாத்மா:—அவ்வாறாகில், தாங்களும் நானும் தென்னாபிரிகாவையும் கிழக்காபிரிகாவையும் பற்றி எழுதிவருவதை நிறுத்தி விட்டால் அங்குள்ள இந்தியர்களின் நிலைமையில் எவருமே கவலை எடுத்துக்கொள்ளார். நாம் ஒன்று மறியாத பாமரர்களினிடையில் வேலை செய்கிறோம். ஆனால் குடியை நிறுத்துவதற்கான வேலைகள் இன்னும் நடைபெற்று வருகின்றன வென்பதைத் தாங்கள் ஞாபகத்தில் வைக்கவேண்டும். கதர் நிலைநாட்டப் பெற்ற இடங்களிலெல்லாம் எல்லா வழியிலும் சுத்திகரிக்கும் வேலைகள் ஆரம்பிக்கப்பட் டிருக்கின்றன. போர்சாது, ராம சாரா அல்லது பர்தோலிக்குச் சென்றால்தாங்கள் அதை நேரில் காண்பீர்கள். கதர் பிரசார ஸ்தலம் இருக்கு மிடங்களெங்கும், மது விலக்கும் சமூக வாழ்க்கையின் நிலைமைகளும் நமது தொண்டர்களின் கவனத்தைக் கவர்ந்து வருகின்றன.

ஆந்தி:—ஆனபோதிலும், கதரையும் நூற்பதையும் சமயச் சார்பான கடமையாகத் தாங்கள் ஏன் செய்கிறீர்கள்? கதர் அணியவாவது நூற்கவாவது போதுமான தைரியமில்லாதவர்களை ஜனங்கள் வெறுக்கமாட்டார்களா?

மகாத்மா.—ஆம்; அது சமயச் சார்பான கடமையாகத் தானிருக்கவேண்டும். நூற்பது சமயச் சார்பான கடமை என வற்புறுத்துவதை நான் விட்டு விட்டால் மட்டும் ஒவ்வொரு இந்தியரும் தேசசேவையில் கவனம் செலுத்துவா ரென்று நிச்சயமாய்க் கூறுவீர்களா? என்றாலும் கதர் தரிக்காதவரும் நூல் நூற்காதவரும் வெறுக்கப்படவேண்டியவர்களென்பது பொரு ளன்று. ஆனால் அவர்களை ஏற்றுக்கொண்டு எமது அன்பினால் கதரின்பக்கத்துக்குஅவரைத் திருப்பிக் கொண்டுவர வேண்டியதுஎமது கடமை யாகும். அவர்களைப் பற்றி விரோதமாய் நினைப்பதனாலும் பேசுவதனாலும் ஒன்றுமாகாது. இந்த வரம்பிலிருந்து நாம்நழுவி விட்டதால் நான் உக-நாள் பட்டினியிருந்து தவ மாற்றினேன். இன்னும் ஜனங்கள் அறிந்துகொள்ளவில்லையா? விரும்பத் தகாதவரின்உதவியை வேண்டாமையும், அவருடன் கூடியடையும் பயனை ஒறுத்தலும், தேவையானபோது அவருக்குஉதவி செய்ய முற்படுதலுமே உண்மையான பஹிஷ்காரமாகும். மதுபானத்தைக் கைக்கொண்டிருப்போரின் விஷயத்தில் அவ்வகையான பஹிஷ்காரத்தை நான் களிப்புடன் அங்கீகரிப்பேன்; ஆனால் கதர் அணியாதவர் விஷயத்திலன்று. ஏனெனில் குடியிலிருப்பதைப் போல விதேச ஆடையில் அவ்வளவு பாபமில்லை.

ஆந்தி:— நான் திருப்தி யடைந்து விட்டதாக உணரும்படி செய்து விட்டீர்கள். இந்தப் பிரச்னைகளை விளக்கியதைப் பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் தாங்கள் கதரை நல்லொழுக்கத்துக்குச் சோதனைக் கல்லாகச் செய்யும் யோசனை தான் எனக்குப் பிடிக்கவில்லை. பொது ஜனங்களின் மதிப்பைப் பெறுவதற்குக் கதர் ஒரு சுலபமான மார்க்கமாயிருப்பதாலேயே, தான்கதரணிவதை விட்டு விட்டதாக நண்பரொருவர் எனக்கு எழுதுகிறார்.

மகாத்மா:—அந்த நண்பர் செய்தது தவறு. பிறனொருவன் அதனைச் செய்வதாக வேஷம்போடுகிறானென்று எனக்குத் தகுதியாகத் தோற்றும் காரியத்தைச் செய்யாது விட்டுவிடுவதா? சிலர் மெய் பேசுவதாகப் பாசாங்கு செய்வதால் நானும் உண்மை பேசுவதை விட்டொழிக்க வேண்டுமெனக் கூறுவதை யொத்திருக்கின்றது.

ஆந்தி.—கதர் பிரசாரத்தில் 'சுத்தி, 'அசுத்தி' என்ற சொற்பிரயோகத்தை எடுத்து விடலாகாதா?

மகாத்மா:—ஆடை சம்பந்தமாக நான் நிச்சயமாய் அச்சொற்களைப்பிரயோகிப்பேன். விதேச ஆடையை ஒரு இந்தியன் அணிவது அசுத்தமானதே. வேண்டுமானால் இங்கிலாந்திலுள்ள இந்தியர்கள் சம்பந்தப் பட்டவரையில் இவ்விதம் நான் கூறமாட்டேன். அசுத்த ஆடையை அணிவோன் அசுத்த மாகாதது போல், அசுத்த வாழ்க்கையி லிருப்போனும் சுத்தமாகிய ஆடை தரிப்பதால் சுத்தனாகமாட்டான். நான் சுத்த ஆடையென்று சொல்லும் கதரின் பொருளாதார மதிப்பு எப்போதும் உள்ளபடியே யிருக்கிறது அதனாலேயே ஒரு விபசாரியும் சுத்தமான கதரையுடுத்து அம்மட்டில் விதேசத்துணிகளை வரவிடாமல் தடுத்து உதவி செய்யலாம்.

ஆந்தி:—விதேசத் துணிகளை 'அசுத்தம்' எனத் தாங்கள் எவ்வாறு சொலுகிறீர்களென்பது எனக்கு விளங்க வில்லை.

மகாத்மா:—அது எனக்குத் தெரியும். அவ்விடத்தில் நாம் மாறுபடுவதை நாம் அங்கீகரிக்க வேண்டும். டில்லி மைதானத்தில் சேகரிக்கப்படும் காற்று சிம்லா உச்சியில் உட்கொள்ளுதற்கு அசுத்தமான பொருளாகும். இந்தப் பொருளில் தான் நான் அந்நியத் துணியை அசுத்தமென்று சொல்லுகிறேன்.

ஆந்தி:—ஆனால் அது எனக்கு விளங்கவில்லை. ஆனபோதிலும் இதர விஷயங்களை யெல்லாம் தாங்கள் எனக்கு விளக்கியதற்காக நான் மகிழ்வெய்துகிறேன்.




குமரன் வாரப்பதிப்பு.

சந்தா விபரம்.

வருஷ சந்தா உள்
நாட்டுக்கு ரூ ச-0-0
வெளி நாடுகட்கு ரூ ரு-0-0

விளம்பர விகிதம்.

மாதம் க-க்கு பத்தி
க-க்கு ரூ. உ0-0-0
ஷ அரைக்கு ரூ. கக-0-0

குமரன் மாதப்பதிப்பு.

சந்தா விபரம்

உள்நாட்டுக்கு வருஷசந்தா ரூ ந-0-0
வெளி நாடுகட்கு ரூ ங-அ-0
தனிப்பிரதி ரூ 0-ச-0
சித்திரைமாத முதலே கணக்கு வைக்கப்படும்.

மானேஜர்,
குமரன் ஆபீஸ், காரைக்குடி.

சொ. முருகப்ப செட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப்பிரசுரிக்கப்பெற்றது

